# ஸ்ரீ வைஷ்ணவம்

## ஸ்ரீ முஷ்ணம் - திருவஹீந்திரபுரம்
## தல வரலாறு



ஸ்ரீ பூவராஹ பெருமாள் - ஸ்ரீமுஷ்ணம்

**பத்மஸ்ரீ ஆன்மீக சேவை**



ஸ்ரீ அம்புஜவல்லி தாயார்

(மூலவர் / உற்சவர்)

ஸ்ரீ முஷ்ணம்

ஸ்ரீ யக்ஞவராஹர்

உற்சவர்

(ஸ்ரீதேவி பூதேவியுடன்)

ஸ்ரீ முஷ்ணம்



# ஸ்ரீ வைஷ்ணவம்

ஸ்ரீ முஷ்ணம் – திருவஹீந்திரபுரம்
தல வரலாறு

வரன் அமைய வரம் தரும்
வளையமாதேவி சிறப்பு

செய்தித் தொகுப்பு
திருமதி **S.ராஜலக்ஷ்மி**
நேர்முக உதவியாளர் (ஓய்வு)
தலைமைச் செயலகம்,
தமிழ்நாடு அரசு

வெளியீடு
**பத்மஸ்ரீ ஆன்மீக சேவை**
நெ. 109, புதுத்தெரு, மண்ணடி,
சென்னை – 600 001.
செல் : 98842 81136
Email : anmmigasevai@yahoo.co.in

# ஸ்ரீ வைஷ்ணவம்


| | |
|---|---|
| பதிப்பாண்டு | 2013 |
| மொத்த பக்கங்கள் | 48 |
| அட்டைப்படம் | ஸ்ரீ பூவராக பெருமாள்-ஸ்ரீ முஷ்ணம் |
| அட்டைப்படம் வடிவமைப்பு | கங்கா டிஜிட்டல் ஆன்லைன்ஸ் |
| புத்தக வடிவமைப்பு | திருமதி. K விஜயலக்ஷ்மி, திருநின்றவூர் |
| கிடைக்குமிடம் | G2,21/9,ராஜாஜி தெரு,<br>சீனிவாச நகர்,<br>புதுப்பெருங்களத்தூர்,<br>சென்னை - 63. |


ஸ்ரீ பூவராக பெருமாள் திருக்கோயில்
திருப்பணி நடைபெற்றுக் கொண்டிருக்கின்றது
உபயதாரர்கள் திருக்கோயிலில் கீழ்வரும்
முகவரியில் தொடர்பு கொண்டு
பங்கேற்று சிறப்பிக்கப் பிரார்த்திக்கின்றோம்

நிர்வாக அதிகாரி
அருள்மிகு ஸ்ரீ பூவராக பெருமாள் திருக்கோயில்
ஸ்ரீ முஷ்ணம்
காட்டு மன்னார் கோயில் வட்டம்.
கடலூர் மாவட்டம் - 608 703.

# ஸ்ரீ வைஷ்ணவம்

## ஸ்ரீ முஷ்ணம்

ஸ்ரீ முஷ்ணம் என்பது கடலூர் மாவட்டம் காட்டு மன்னார்கோயில் தாலுக்காவில் உள்ள ஓர் முக்கிய க்ஷேத்திரம். இங்கு பிரசித்தி பெற்ற ஒரு விஷ்ணு ஆலயமும், ஒரு சிவாலயமும் உள்ளது. இந்தியாவின் பல பாகங்களிலிருந்தும் யாத்ரிகர்கள் தரிசனத்திற்காக இங்கு வருகின்றனர்.

| | | |
|---|---|---|
| க்ஷேத்திரம் | - | ஸ்ரீ முஷ்ணம் |
| விமானம் | - | பாவன விமானம் |
| மூலவர் | - | ஸ்ரீ பூவராஹ சுவாமி |
| வேறு பெயர்கள் | - | ச்வேத வராஹர் (ஆதி வராஹ ஸ்வாமி, ஞானப்பிரான்) திருமுக மண்டலம் மட்டில் தெற்கானது |
| உற்சவர் | - | ஸ்ரீ யக்ஞ வராஹ ஸ்வாமி |
| தாயார் | - | ஸ்ரீ அம்புஜவல்லி |

மற்ற சன்னிதிகள்

ஸ்ரீ போக நாராயண ஸ்வாமி சன்னிதி
ஸ்ரீ நிவாஸ ஸ்வாமி சன்னிதி
ஸ்ரீ வேணுகோபால ஸ்வாமி சன்னிதி
ஸ்ரீ பட்டாபிராமன் சன்னிதி
ஸ்ரீ கொழந்தையம்மன் சன்னிதி

அச்வத்த விருச்க்ஷமும், நித்யபுஷ்கரிணி முதலிய பன்னிரண்டு தீர்த்தங்களும் விசேஷம் வாய்ந்தவை.

பூஜாவிதி : ஸ்ரீ பாஞ்சராத்திர ஆகமம், பாத்ம ஸம்ஹிதை
ஆபஸ்தம்பீய ஸ்ரீ வைஷ்ணவர்கள் திருவாராதனம்

ஸ்ரீ வைஷ்ணவம் (ஸ்ரீ முஷ்ணம்) தல வரலாறு

இப்பாரத பூமியின் கண் சுயம்பு – அதாவது தானே ஏற்பட்ட மூர்த்திகளை உடைய க்ஷேத்திரங்கள் எட்டு. அவையாவன: (1) ஸ்ரீரங்கம் (2) ஸ்ரீ முஷ்ணம் (3) திருப்பதி (4) ஸாளக்ராமம் (5) வானமாமலை (6) புஷ்கரம் (7) நைமிசாரண்யம் (8) பத்ரிகாச்ரமம் என்ற எட்டு வைஷ்ணவ சுயம்பு க்ஷேத்திரங்களாகும். மேலே கூறப்பட்ட எட்டு க்ஷேத்திரங்களும் வட இந்தியாவில் நான்காகவும், தென்னிந்தியாவில் நான்காகவும் அமைந்துள்ளன. இவை திருவஷ்டாசரத்தின் 8 எழுத்துக்களை கருத்தில் கொண்டன. தென்னிந்தியாவில் அமைந்துள்ளவை: (1) ஸ்ரீரங்கம் (2) ஸ்ரீ முஷ்ணம் (3) திருப்பதி (4) வானமாமலை வட இந்தியாவில் அமைந்துள்ளவை: (1) சாளக்ராமம் (2) நைமிசாரண்யம் (3) புஷ்கரம் (4) பத்ரிகாச்ரமம்

தேவர்களும், ரிஷிகளாலும், மனிதர்களாலும், நிர்மாணம் செய்து பூஜிக்கப்பட்ட மூர்த்திகளும் அம்மூர்த்திகள் எழுந்தருளியுள்ள க்ஷேத்திரங்களும் பன்மடங்கு உயர்ந்தவையாகும்.

சொல்லொணாப் பெருமை வாய்ந்த எட்டு சுயம்பு க்ஷேத்திரங்களுள் ஸ்ரீ முஷ்ணம் க்ஷேத்திரமும் அந்த க்ஷேத்திரத்தில் கோயில் கொண்டெழுந்தருளி உள்ள பூமிநாயிகா சமேத ஸ்ரீபூவராஹனின் பெருமையும் தனிச் சிறப்புக் கொண்டவை.

வைஷ்ணவ ஆலயங்களில் பூஜையானது இரு பிரிவாக பிரிக்கப்பட்டுள்ளது. (1) ஸ்ரீ பாஞ்சராத்ராகம பூஜை (2)

ஸ்ரீவைகானஸ பூஜை என்று. முதலில் குறிப்பிட்ட ஸ்ரீபாஞ்சராத்ர ஆகமமானது, பூஜையை மூலமூர்த்தி ஒருவரையே முக்கியமாகக் கொண்ட பூஜை என்றும் ஐந்து மூர்த்திகளை முக்கியமாகக் கொண்ட பூஜை என்றும் இரு பிரிவுகளைப் பிரிக்கின்றது. அப்படிப் பிரித்து பூஜை செய்யுங்கால், ஐந்து மூர்த்திகளை முக்கியமாகக் கொண்ட பூஜைதான் இந்த க்ஷேத்திரம் நீங்கலாக மற்ற ஸ்ரீ பாஞ்சராத்ர விதிப்படி ஸகல பாரத ஆலயங்களில் நடைபெற்று வருகிறது. இம்மாதிரி மூலமூர்த்தி ஒருவரையே முக்கியமாகக் கொண்டு பூஜை செய்யப்படும் மூர்த்தியை ஏகபேரமூர்த்தி என்றும், அம்மூர்த்தி எழுந்தருளியுள்ள க்ஷேத்திரத்தை ஏகபேரக்ஷேத்திரம் என்றும் பெருமை மிக்கதாக சாஸ்திரம் கூறுகிறது. மேற்சொல்லப்பட்ட விசேஷத்தின்படி இங்கு முக்கியமாக சாஸ்திர சம்பந்தமான காரியங்கள் மூல மூர்த்திக்குத்தான் நடைபெறுகின்றன மற்றும் மற்றொன்று இங்கு கர்ப்பகிரஹத்தில் மூலமூர்த்தி மட்டில் எழுந்தருளி இருப்பதும் அம்மூர்த்தியும் மற்ற க்ஷேத்திரங்களிற் போலன்றி பிரம்மஸ்தானம் என்று சொல்லக்கூடிய கர்ப்பகிரஹ மத்தியில் எழுந்தருளி இருப்பதும் ஏகபேர ச்ாஸ்திரத்தையொட்டிய விசேஷங்களாகும். இம்மாதிரியாக ஏகபேர ஆலயம் ஸ்ரீபாஞ்சராத்ராகமத்தையொட்டி பூஜை நடைபெறும் ஆலயங்களுள் இது ஒன்றே. ஆகையால் தான் இந்த க்ஷேத்திரமும்,க்ஷேத்திரத்தின் ஏகபேர மூர்த்தியாகிய ஸ்ரீ பூவராஹப் பெருமானும் தனிப் பெருமை கொண்டவர் என்று சொல்லப் பட்டுள்ளது.

பிரம்மனின் உடலிலிருந்து ஸ்ருஷ்டியின் ஆரம்ப காலத்தில் ஹிரண்யாக்ஷன் என்னும் அசுரன்

தோன்றினான். அவன் அஸ்திவாரமற்ற வீட்டைப் போல் அடிப்படை இல்லாமல் இருக்கும் உலகத்தைக் கடலில் கொண்டு மறைத்து விட்டான். அப்பொழுது தேவர்கள் உலகத்தின் இந்நிலைமையை ஸ்ரீமந்நாராயணனிடம் சென்று முறையிட, பக்த வத்ஸலனான ஸர்வேச்வரன் மனமிரங்கி, வராஹவதாரம் எடுத்து, அவ்வசுரனைக் கொன்று பூமியினை முன்நிலைமையில் நிறுத்தினார்.

மேலும் தவித்துக் கொண்டிருந்த தேவர்களுக்கு இந்த க்ஷேத்திர பூமியில் இடங்கொடுத்து இதுவரை அவர்களுக்கு ஏற்பட்ட துன்பங்களைப் போக்கி, அத்தேவர்களுக்கு வேதங்களையும் கற்பித்தார். இவ்வாறு அசுரனைக் கொன்று பூமியை முன்நிலையில் நிறுத்திக் களிப்பையுண்டாக்கியதாலும், தேவர்களுக்கு ஏற்பட்ட சிரமத்தைப் போக்கிக் களிப்பை உண்டாக்கியதாலும் இந்த க்ஷேத்திரத்திற்கு ஆனந்த பவனம் என்ற பெயர் உண்டாயிற்று.

அனுசர்க்கத்தில் மரீசி பிரம்மனால், திதியினிடத்தில் இரு அசுரர்கள் தோற்றுவிக்கப்பட்டனர். அவர்களுள் ஹிரண்யாக்ஷன் பிரம்மனின் வரபலத்தால் இப்பூமியை அபகரித்துச் சென்று விட்டான். தேவர்கள் பூமியின் நிலைமையை லக்ஷ்மீபதியிடம் விண்ணப்பித்து முறையிட, பகவான் வெண்பன்றி உருக்கொண்டு அவ்வசுரனைக் கொன்று பூமியை வெளிக்கிளப்பி முன்நிலையை ஏற்படுத்தினார். வேதங்களை தேவர்களுக்கு அத்யாயனம் செய்வித்தார்.

மற்றொரு காலத்தில் துஷ்டனான ஹிரண்யாக்ஷனுக்கும் ஜில்லிகை என்னும் அரக்கிக்கும் பிறந்தவரனான தண்டகன் என்னும் அசுரன் ஈச்வரனிடத்தில் பக்தி கொண்டவனாயினும்

தேவர்களுக்குக் கெடுதியை விளைவித்து வந்தான். பக்தர்களின் துன்பத்தைப் பார்த்து சகிக்க இயலாதமையால் ஸர்வேசுவரனான வராஹபகவான் அவனை ஸம்ஹரித்து அதுசமயம் தண்டகனின் தாயான ஜில்லிகை தன்பெயரால் இந்நாடு விளங்க வேண்டுமென வரம்கேட்க. அப்படியே வரங்கொடுத்து ஜில்லிகைக்கும், தண்டகனுக்கும் மோக்ஷத்தைக் கொடுத்தார். அது முதல் இந்த க்ஷேத்திரத்திற்கு ஜில்லிகாவனம் என்ற பெயரும் வழங்கி வருகிறது.

துஷ்டர்களான ஹிரண்யாக்ஷன், தண்டகன் முதலியவர்களைக் கொண்டு அவர்களின் செல்வம், கீர்த்தி, ஆயுள் முதலியவைகளை, ஸ்ரீவராஹ பகவான் அபகரித்ததாலே ஸ்ரீ முஷ்ணம் (ச்ரியம் + முஷ்ணாதி இதி ஸ்ரீ முஷ்ணம்) என்ற பெயர் வழங்கி வருகிறது. இந்த க்ஷேத்திரமானது அங்கு வாழ்வோரின் தீயசெல்வம், தீயபுகழ் குறைவான ஆயுள் முதலியவைகளை நீக்குகிறதாகையாலே ஸ்ரீ முஷ்ணம் என்ற பெயர் பெற்றது என்று கூறுவர்.

மஹாலக்ஷ்மியானவள் காத்தியாயன மகரிஷியின் தவத்திற்கு இணங்க அவருக்கு மகளாகத் தோன்றி தற்காலம் வளையமாதேவி என்று கூறப்படும் வேதநாராயண க்ஷேத்திரத்தில் வராஹனைத் தரிசித்து அவர்பேரில் விருப்பங் கொண்டு அவரையே மணக்கத் தீர்மானித்தாள். அச்சமயம் வராஹ பகவான் அவரை சோதிக்க நினைத்து பிரம்மனை அன்னத்தின் உருக்கொண்டு சென்று தன்னைப் பற்றி அவளிடம் தூஷிக்கும்படியாக அனுப்பிவைத்தார். அவ்வாறே பிரம்மன் முனிவர் ஆசிரமம் சேர்ந்து, லக்ஷ்மியின் முன்பாக வராஹனைப் பற்றி பலவாறாக இகழ்ந்து பேச,

அவளும் இவ்வார்த்தைகளை வராஹன்பேரில் கொண்ட அன்பினால் கேட்க சஹியாதவளாய்ச் செவிகளைப் பொத்திக் கொண்டு வெளியே ஓடினாள். அப்பொழுது பகவான் அவ்வாச்ரமத்தின் வாயிலில் தோன்றி ஓடிவந்த லக்ஷ்மியின் கேசத்தைப் பற்றி நிறுத்தி தன் ஸ்வரூப தரிசனமளித்தார். இத்தருணத்தில் முனிவர் அங்கு வந்து வராஹனை வணங்கித் தன் மகளை ஏற்றுக் கொள்ளுமாறு வேண்டி வராஹனுடைய பாதங்களில் சாஷ்டாங்கமாக வணங்கினார். அக்காலத்தில் தேவர்களும் ஏனையோரும் திருமண ஏற்பாடுகளைச் செய்ய, திருமணம் சிறப்பாக நடந்தேறியது. இந்நிலையில் தேவியானவள் பகவானின் குணவிசேஷங்களை நன்கு அறிந்தவளாயினும் அருகிலுள்ள தாதிகளும் மற்றும் சில அறிவிலிகளும் எல்லாவற்றிலும் தாழ்ந்ததாகக் கருதப்படும் வராஹனை (பன்றியை) திருமணம் செய்து கொண்டதைப் பற்றி பரிகசிக்க, மனம் வெதும்பி 'ஸாக்ஷாத்மன்மத மன்மத' என்றபடி மன்மதனுக்கும் மன்மதனாக இப்பாமரர்களறிய ரூபந்தரித்து சேவை தந்தருளவேண்டும் என வராஹ பகவானை வேண்ட அவரும் பிரம்மனுடைய யாகத்திலிருந்து சதுர்புஜங்களுடனும் கோடி சூர்ய பிரகாசத்துடனும் கூடிய திவ்ய மங்கள விக்ரஹ ரூபியாய்த் தோன்றினார். இவ்வாறாக பிரம்மனின் யாகத்திலிருந்து தோன்றியதால் யக்ஞவராஹன் என்ற திருநாமம் ஏற்பட்டது.

**கோயிலின் முக்கிய சன்னிதி ஸ்ரீ பூவராஹ சுவாமி சன்னிதி, சுவாமி மேற்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் காட்சி அளிக்கிறார். முகம் மட்டும் தெற்குநோக்கி உள்ளது. அசுரர்களை வென்றதால் ஏற்பட்ட வெற்றிப் பெருமித உணர்ச்சி பொங்க இரு கைகளையும் இடுப்பில் வைத்துக்**

கொண்டு முகத்தை நிமிர்த்தி கம்பீரமாகப் பார்க்கிறார். மூலவர் சாளக்ராம மூர்த்தி, மேலே உள்ள விமானம் சிதானந்த விமானம் என்று கூறப்படும் சுயம்வியக்த விமானம். பகவத் சங்கல்பத்தால் தோன்றியது.

கருவறைக்கு முன்பு மேற்புறம் அர்த்த மண்டபத்தில் உற்சவர் யக்ஞவராஹமூர்த்தி ஸ்ரீதேவி பூதேவியருடன் மேற்கு நோக்கி காட்சி தருகிறார். உடன் ஆதிவராஹமூர்த்தியும், கண்ணனும் எழுந்தருளியுள்ளனர். ஸ்ரீஅம்புஜவல்லித் தாயாரின் வேண்டுகோளுக்கிணங்கி அழகுவாய்ந்த கல்யாணத் திருக்கோலத்தில் எழுந்தருளியதாக புராண வரலாறு.

இதன் முன் உள்ள மகாமண்டபத்தில் போகநாராயணர் உபய நாச்சியார்களுடன் காட்சி தருகிறார். பிரதான மூர்த்தியின் பிராகாரத்திற்கு அடுத்துள்ள பிராகாரத்தில் தென்மேற்கு மூலையில் ஸ்ரீ அம்புஜவல்லித்தாயார் சன்னிதியும் அதன் முன் ஊஞ்சல் உற்சவ மண்டபமும் அமைந்துள்ளன. இச்சன்னிதியில் மூலவருக்கு முன் உற்சவர் அம்புஜவல்லித்தாயார் காணப்படுகிறார்.

இதே பிராகாரத்தில் மேற்கு கோபுரவாசலின் உட்புறத்தில் வாசலின் கீழ்புறம் கோபுரத்தின் முதல்நிலையில் ஸ்ரீவராஹப்பெருமானை நோக்கி கிழக்கே பார்த்திருக்கும் ஸ்ரீநிவாசப் பெருமாள் சன்னிதி உள்ளது. மூலவரைத் தரிசிக்கும் முன்பு ஸ்ரீநிவாசப் பெருமாளையும், அடிவாரத்தில் அமைந்துள்ள அவர் திருவடிகளையும் தரிசித்து செல்வது வழக்கம்.

இப்பிராகாரத்தின் வடமேற்கு மூலையில் ஸ்ரீஆண்டாள் சன்னிதி அமைந்துள்ளது.

இப்பிராகாரத்தின் வடபுறம் வேணுகோபாலன் சன்னிதியும் அடுத்து விஷ்வக்சேனர் சன்னிதியும் உள்ளன.

பிராகாரத்தின் வடகிழக்குப் பகுதியில் மேற்கு நோக்கி அமைந்திருப்பது ஸ்ரீவேதாந்த தேசிகன் சன்னிதி. ஸ்ரீதேசிகன் அருளிச் செய்த தசாவதார ஸ்தோத்திரம், ரஹஸ்யசிகாமணி, பூஸ்துதி, தமிழ் பிரபந்தம் ஆகியவற்றுள் வராஹப் பெருமானிடம் அவருக்குள்ள ஈடுபாட்டை காணலாம்.

இதே பிராகாரத்தில் திருமங்கை மன்னன், மணவாளமாமுனிகள், திருக்கச்சிநம்பிகள் ஆகியோரின் சன்னிதிகளும் காணப்படுகின்றன.
இப்பிராகாரத்தின் வடபுறத்திலுள்ள கோபுரத்தின் பக்கத்தில் குழந்தை அம்மன் ஆலயம் உள்ளது. இங்கே ஸ்ரீஅம்புஜவல்லித் தாயாரின் தோழிமார்களுக்கு இடம் அளிக்கப்பட்டிருக்கிறது.

மூலவர் சன்னிதிக்கு எதிரே புருஷசூக்த மண்டபம் இருக்கிறது. இம்மண்டபத்தில் கலையழகு மிக்க வீரர்கள், குதிரைகள், பட்சிகள் முதலான உருவங்கள் கண்ணையும், கருத்தையும் கவர்வனவாக உள்ளன. இங்கே புராண வரலாறுகள் நன்கு சித்தரிக்கப்பட்டுள்ளன. மண்டபம் ரதம் போல் உருவாக்கப்பட்டுள்ளது. இதைக் கட்டிய நாயக்க மன்னர்களின் சிலையும் அவர் குடும்பத்தினரின் சிலைகளும் அமைந்துள்ளன.

புருஷசூக்த மண்டபம்

மேற்றிசை நோக்கும் நெடிதுயர்ந்த ராஜகோபுரம். அதைக் கண்டபின் கீழே குனிந்தால் இடது ஓரம் இனிதே நமக்கு நல்வரவு தரும் ஒரே சாண் அளவுள்ள இராமலக்ஷ்மணர்களின் சிற்பங்கள். உட்புறம் ராஜகோபுரத்தை அண்ணாந்து பார்த்தால் மஹாலக்ஷ்மியின் காட்சி. மேலும் எண்ணற்கரிய கண்கவர் சிற்பங்கள். அதில் எழுந்தருளிபுள்ள ஸ்ரீநிவாஸனுக்கு நூற்றுக்கால் மண்டபத்தில் அமையப் பெற்ற கருட கம்பத்துடன் இளங்கோயில். (இந்த ஸ்ரீநிவாஸனைத் தொழுத பின்பே ஆதிவராஹப் பெருமாளைத் தொழவேண்டும் என்பது மரபு) அக்கோபுரத்தின் அண்மையிலே அமைந்து விளங்குவது நூற்றுக்கால் மண்டபம். அதிலேயும் சிற்பச் செழிப்போடு காட்சி தருகின்றது புருஷசூக்த மண்டபம்.

நூற்றுக்கால்மண்டபத்தின் கீழ்ப்பகுதி மையத்தில் அரிய அழகிய சிற்ப வேலைப்பாடுகளோடு ஒரு மண்டபம் காணக்கிடைக்கின்றது. அது ஸ்ரீயக்ஞவராஹ மூர்த்தியின் நீராட்டு மண்டபம். நீராட்டம் நடைபெறும்போது அருமறையோர் அங்கே மறையுள் சிறந்ததான புருஷசூக்தத்தை ஓதுகின்றனர். புருஷசூக்தம் பதினாறு (அ) பதினெட்டு ருக்குகளை (ஆ) மந்திரங்களைக் கொண்டது. ஆதலால் பதினாறுகால் மண்டபம் 'புருஷசூக்தமண்டபம்' எனப்பெயர் பெற்றது. அங்கே இன்றளவும் ஆண்டவனை 'ஸதாசேவை' என சேவித்து நிற்போர் மற்றும் அச்சுதப்பநாயக்கனின் குடும்பத்தார் சிலைகள் மிக அழகுவாய்ந்தவை. அக்கால பாரம்பரியத்தைத் பறைசாற்றுபவை. பாரதம், பாகவதம், புராணம் மற்றும் பல்வேறுவகைச் சிற்பங்கள்.

மண்டபச்சுற்றுவரிசையில் காணப்படும் நாட்டிய கரணங்கள் தெவிட்டாத இன்பம் பயப்பன.

அச்சுதப்பநாயக்கர் அவர்கள் ஸ்ரீமுஷ்ணம் ஆதிவராஹஸ்வாமி கோயிலில் சிறப்பான கைங்கர்யங்களைச் செய்துள்ளார். அக்கோயிலிலுள்ள புருஷசூக்த மண்டபம் மற்றும் சில சிறிய சன்னிதிகள் அச்சுதப்ப நாயக்கரால் நிறுவப்பெற்றவை. ஒரு காலத்தில் கோயிலின் கருவூலக் கண்காணிப்பையும், நிர்வாகப் பொறுப்பையும் அச்சுதப்பரே ஏற்று நடத்தி வந்தார். அக்கோயிலுக்காகப் பற்பல கிராமங்களையும் தானமளித்துள்ளார். மேலும் விஜயநகரப் பேரரசுக்குட்பட்ட தஞ்சையை ஆண்ட மன்னர் அச்சுதப்பநாயக்கரின் பிரதிநிதிகளான ஆனந்தன், கோவிந்தன், கொண்டலு என்ற மூன்று உடன்பிறப்பாளர்களும் இணைந்து இந்த பதினாறுகால் (புருஷசூக்த) மண்டபத்தினை வடிவமைத்ததாக தென்னார்க்காடு கெஸட்டியர் கூறுகிறது.

**பூவுலகத் தோற்றமுறைக்கும் புருஷோத்தமன்**

புருஷசூக்தமண்டபத்துள் அமைந்த அரிய சிற்பங்களுள் ஒன்றே 'பூவுலகத் தோற்றமுறைக்கும் புருஷோத்தமன்' தூண்புடைப்புச் சிற்பம் ஆகும். இதனை கருடன் சன்னிதியை ஒட்டியே வலப்பக்கத்தில் அமைந்துள்ள தூணில் கிழக்கு நோக்கியவண்ணம் நின்ற கோலத்தில் நிறுவியுள்ளார். அம்மூர்த்தியின் வலது இடது கீழிருகரங்களில் முறையே வரம் தரும் கையினையும், அச்சமகற்றும் முத்திரையினையும், வலது இடது மேலிருகரங்களில் முறையே திருவாழித் திருச்சங்கங்களைப் பெற்றுள்ளார். அவரது இடுப்பின் கீழ்ப்பகுதியில் தென் பாதி பெண்குதிரை

வடிவும், வடபாதி பெண்மாட்டின் வடிவும் காணக்கிடைக்கின்றன. பெண்மாட்டின் சுரப்பிகளில் பெருகும்பாலை அருந்தும் நிலையில் சதுர்முகப் பிரம்மா தன் கீழ்ப்பகுதியை குதிரைவடிவோடு நிறுவப் பெற்றுள்ளார். அக்குதிரையின் கால்களுக்குக் கீழே ஜடாமுடிதாங்கிய ஒருவர் அஞ்சலிமுத்திரையோடு அமர்ந்த நிலையில் காட்சி கொடுக்கிறார்.

**சிற்பவிளக்கம்**

இந்த சிற்பம் உலகின் தோற்றத்தை விளக்கும் ஓர் உன்னத படைப்பாகும். வேதத்துள் சிறந்த புருஷசூக்தம் மற்றும் பாகவத மகாபுராணத்தின் அடிப்படையில் இவ்வரியசிற்பம் அமைந்து விளங்குகின்றது. வராஹன்பாதி புருஷன்பாதியாக விளங்கும் ஸ்ரீமுஷ்ணம் ஆதிவராஹப்பெருமாள் கோயிலில் வாசுதேவனே புருஷன், பிரம்மா முதல் மற்ற உலகமெல்லாம் பெண்வடிவமென்று பேசும் ந்ருஸிம்மபுராணக் கூற்றுபோலே புருஷன் பாதி பூவுலகம் பாதி எனும் உயர் தத்துவம் நிலைநாட்ட உரிய இடம் புருஷசூக்தமண்டபம் என்றால் அது மிகையல்ல.

எம்பெருமானின் ஸ்ருஷ்டியில் பிரம்மாதி தேவர்கள், பூமி, பூமியிலிருந்து கிடைத்த பொருட்களைக் கொண்டு தேவர்கள் புரியும்வேள்வி, 'அதிலிருந்து குதிரைகள் தோன்றின' ஆநிரைகள் முதலானவற்றை எம்பெருமான் அதிலிருந்தே தோன்றச்செய்தார் எனக்கூறும் புருஷசூக்தம் ஈண்டு நினைக்கத்தக்கது.

ஆயிரம் தலைகள், ஆயிரம் கண்கள், ஆயிரம் கால்கள் கொண்ட விராடபுருஷனின் தோற்றம், எம்பெருமான்

பிரம்மனைத் தன்னுந்தியிலே தோற்றுவித்தல், பிறகு பிரம்மதேவர் தம் மனத்திலிருந்து ஸனகர், ஸனந்தனர் முதலான பிறவித் துறவிகளைத் தோற்றுவித்து ஜகத்ஸ்ருஷ்டி மேற்கொள்ளப் பணிக்க, அம்முயற்சி பலிதமின்றி அவர்களும் தியானதவங்களில் ஆழ்ந்துபட, பிரம்மதேவர் தம் புருவத்திலிருந்து உருத்திரரைத் தோன்றச்செய்து உலகுபடைக்கக் கோருகிறார். அவரது படைப்பில் திருப்தி அடையாத பிரம்மதேவர் இறுதியாகத் தன்னையே ஆணுமாகவும், பெண்ணுமாகவும், பிரித்துக்கொண்டு பிராகிருதம் (சத்வம், ரஜஸ்,தமஸ் முதலான குணாதி), வைகிருதம் (நிற்பன மற்றும் நடப்பன), தேவம் (வானவர் உலகம்) என மூன்று பிரிவுகளில் 10 வகையாக உலகைப் படைக்கின்றார். ஆயினும் ஜடாமுடியுடன் தொழுதகையோடு அமர்ந்தநிலையில் கீழே, ஒருநபரைக் காண்கின்ற போழ்து ஸனகர் முதலான நான்கு முனிவர்கள், உருத்திரர் போன்றோரின் தோற்றத்தை ஆங்கே நினைக்கச் செய்கின்றது. ஒரு நபரே ஆதலால் அவர் உருத்திரரே என்பதும் உறுதிபடுகின்றது. மேலும் ஸமஷ்டிஸ்ருஷ்டிக்கு (சுவர்க்கம்,பூமி, பாதாளம் ஆகிய பரந்த உலகத்தோற்றத்திற்கு) அதிபதியாக ஶ்ரீமந்நாராயணன் தானே உலகுபடைத்ததையும், பிரம்மதேவர் முதலானோரைக் கொண்டு அனைவர்க்கும் உள்ளுறைபவனாக இருந்து தானே இந்த வியஷ்டி, ஸ்ருஷ்டியையும் (அதிலிருந்து பூவுலகத் தோற்றத்தையும்) புரிந்ததை எடுத்துரைக்கின்றது.

பிரம்மதேவரின் படைப்புத்தொழில் ஒருவாறு நிறைவேற, தோன்றிய இனங்களுக்கு வாழ்விடம் ஏற்படுத்தும் தமது கோரிக்கையினை அவரிடம் தெரிவிக்கின்றனர். வாழ்விடமான பூவுலகம் கடலில் மூழ்கிக் கிடைப்பதையறிந்து அதனை வெளிக்கொணர பிரம்மதேவர் தம் மூக்கின்

வழியாக வராஹாவதாரத்தைத் தோற்றுவித்து, தடையான ஹிரண்யாக்ஷனை கொல்லச் செய்து, கடலிலிருந்து பூவுலகை மீட்டுவரச் செய்தார். பிரம்மதேவரின் நூறு ஆண்டுக்கால ஆயுள் நிறைவுற்ற நிலையில் அதனை அடுத்து பேசப்படுவதும் தற்போது நடைமுறையில் இருப்பதும், தான் ஸ்ரீசுவேதவராஹ கல்பம் என்பதும் ஈண்டு நினைக்கத் தக்கது.

**கண்ணாடி அறை**

உடையார் பாளையம் ஜமீன்தார்களால் இக்கோயில் பராமரிக்க செய்யப்பட்டு வந்த ஒரு காலத்தில் கோயில் பிராகாரத்தின் வடபுறம் மண்டபம் கட்டப்பட்டதாக கூறப்படுகிறது. இது உடையார் மண்டபம் என்று வழங்கப்படுகிறது. இது சுவாமி அலங்கார மண்டபமாக பயன்படுகிறது. இங்கு வேலைப்பாடுமிக்க கண்ணாடி அறை அமைக்கப்பட்டுள்ளது. இதில் பெருமாளும் தாயாரும் விசேஷ உற்சவ காலங்களில் அலங்கரிக்கப்பட்டு காட்சி தருவார்கள்.

கண்ணாடி மண்டபத்தில் நாம் நிற்கும் போது நம் ஜீவனின் தத்துவம் தெரிகிறது. அதாவது நம் பின்னாலும் முன்னாலும் எத்தனையோ பிரதி பிம்பங்கள். இது நாம் பல பிறவிகள் கடந்தும் இன்னும் நம்முள்ளாய் பல பிறவிகள் காத்திருக்கின்றன. இந்த துக்க சூழலில் நாம் கிடந்து இன்னும் எத்தனையோ பிறவிகள் எடுத்து உழல வேண்டியது இருக்கிறது என்பதை காட்டுகிறது.

இதிலேயே நடுவில் எம்பெருமானை எழுந்தருள செய்து நாம் சேவிக்கும் போது நம் பின்னால் நம் உருவம் இருக்கும். ஆனால் எதிர்புறம் அவர் உருவம் இருக்கும். ஆனால் எதிர்புறம் அவர் உருவம் மட்டுமே தெரியும்.

இதனால் அவன் நமக்கு தெரிவிப்பது யாதெனில் நீ பல பிறவிகள் கடந்து வந்தாய், தற்போது என்னை அடைந்து விட்டாய். இனிமேல் உமக்கு எதிர் பிறவி என்பது கிடையாது. மோட்சம் தான் எனும் உயர்ந்த தத்துவத்தை காட்டி அருளுகிறார். அதனாலேயே மண்டபத்தில் இறைவனை சேவிப்பதை விட உயர்வான விஷயம் வேறொன்றுமில்லை எனலாம்.

துவஜஸ்தம்பத்திற்கு மேற்கிலும் மேல் கோபுரவாசலுக்குக் கிழக்கிலும் நூற்றுக்கால் மண்டபம் அமைந்துள்ளது. இதன் தென்புறம் நம்மாழ்வார் சன்னிதி இருக்கிறது.

ஸ்ரீ பூவராஹசுவாமி சன்னிதிக்கு எதிரில் வடமேற்குப் பகுதியில் உள்ள நந்தவனத்தின் மத்தியில் ராமர் சன்னிதி இருக்கிறது. இங்கே ராமபிரான், சீதை, லஷ்மணன், பரதன், சத்ருக்னன், ஆஞ்சநேயர் பட்டாபிஷேகத் திருக்கோலத்தில் காட்சி தருகின்றனர். மச்ச,கூர்ம மூர்த்திகளும் இங்கே இடம் பெற்றிருக்கின்றனர்.

கோயிலின் வடபுறத்தில் அமைந்துள்ள கோபுரவாசலுக்கு வைகுண்ட வாசல் என்று பெயர் வைகுண்ட ஏகாதசி அன்று இது திறக்கப்படும்.

பூவராஹசுவாமி சன்னிதிக்கு எதிரில் உள்ள சன்னிதி வீதியில் மேற்கோடியில் ஆஞ்சநேயர் சன்னிதி உள்ளது. இதற்குத் திருவடிக்கோயில் என்ற மற்றொரு பெயர் உண்டு. வீதி உற்சவங்களின் போது ஸ்ரீ யக்ஞவராகன் இக்கோயிலுக்கு எழுந்தருளுவார்.

கடலினின்றும் பூமியை மேலே கொண்டு வந்த வராஹப்பெருமான் சகல உயிர் வருக்கங்களுக்கும் ஆனந்தத்தைக் கொடுத்ததனாலே தானும் பேரானந்தம் அடைந்தான். ஆனந்தக் கண்ணீர் வெளிப்பட்டது. எல்லோருக்கும் ஆனந்தம் விளைவித்த அந்த இடத்திற்கு ஆனந்தபவனம் என்று பெயர்.

**அசுவத்த மரம்**

இரண்யாக்ஷ அசுரனைக் கொன்று சமுத்திரத்தினின்றும் பூமியை மேலே கொணர்ந்து, தேவர்கள் துயரைத் துடைத்து, உயிர் வருக்கங்களுக்கு உறைவிடத்தை அளித்த அருஞ்செயலால் பெருமானுடைய கண்களினின்றும் ஆனந்தக் கண்ணீர் துளிர்த்து இரு சொட்டுகள் கீழே விழுந்தன. ஒன்று திருத்துழாயாகவும். (துளசி) மற்றொன்று அசுவத்த (அரச) மரமாகவும் தோன்றின. பிரளயத்திற்குப் பின் பூமி மேலே கொண்டுவரப்பட்ட உடன் முதலில் தோன்றிய இம்மரத்தை ஆதிவிருக்ஷம் என்று அழைப்பார்கள். மரங்களுக்குள்ளே நான் அசுவத்தமரமாக இருக்கிறேன் என்று பகவான் தன்னையே கீதையில் குறிப்பிடுவதன் மூலம் இதன் பெருமை புலனாகும். கடோபநிஷத்திலும் இந்த அசுவத்தம் சநாதனமானது, பழமையானது என்று குறிப்பிடப் பெறுவதும் மரங்களுக்குள்ளே அரசமரம் என்ற பெயர் வாய்க்கப் பெற்றிருப்பதுமே இதன் பெருமைக்கு சான்றுகள். பன்றியும் ஆமையும் மீனமுமாகிய பாற்கடல்வண்ணன் தீ, புவி, காற்று,நீர்,விண் பூதமைந்துமாய் நின்ற பெருமான் அசுவத்தமாயும் விளங்கினான் என்ற புராணக் கூற்றைக் காண்கின்றோம். இது நித்யபுஷ்கரணியின் தென்கிழக்கு மூலையில் உள்ளது. இதில் எல்லா தேவர்களும்

வசிப்பதாகவும் இது எல்லோருக்கும் நலம் பல பயப்பதாகவும் போற்றப் படுகிறது. பகவான் அசுவத்திற்கு நான் எப்படி எல்லோராலும் போற்றப்படுகின்றேனோ போற்றியவர்களுக்கு அருளுகின்றேனோ, அப்படியே நீயும் போற்றப்படுவாய், நீயும் பிறர்க்கு வரங்களை அருள்வாய் என்று வரத்தைக் கொடுத்தாராம். விருக்ஷராஜன் என்ற பட்டத்தையும் அளித்தார். பூத பிசாசுகளால் துன்புறுத்தப்படுவோரும், மகாரோகங்களால் பீடிக்கப்படுவோரும், சனி முதலான கிரகங்களால் இன்னல் அடைந்தோறும் அசுவத்த சேவையால் துன்பம் நீங்கி இன்பம் எய்துவர்.

இவ்வசவத்த மரத்தடியில் அமர்ந்துகொண்டு தேவர்களுக்குப் பெருமான் வேதாத்யாயனம் செய்து வைக்கிறார். ஆதலின் அப்பெருமான் தேவர்கள் ஆகியோரின் சாந்நித்யம் இம்மரத்திற்கு உண்டு. இதுபோன்று எங்கெல்லாம் அரசமரம் இருக்கின்றதோ அங்கெல்லாம் தெய்வ அருள் உள்ளது. ஆதலினாலே அவை பூஜிக்கத்தக்கன என்று பகவான் அருளுகின்றார். ஒருமாதம் இடைவிடாது அரசமரத்தைப் பூஜித்தால் சத்ருக்கள் நாசம் அடைவார்கள். இதைப் பூசிப்பவர் புத்திரம், பொருள், வித்தை முதலியவற்றைப் பெறுவர். நாள்தோறும் வழிபடுவோர் நூறாண்டு வாழ்வர். ஞாயிறுதோறும் மிருத்யுஞ்ஜய ஹோமம் செய்வோரும் நூறாண்டு வாழ்வர். குருவாரத்தில் அன்னதானம் செய்வோர் நாடாள்வர். சனிவாரத்திலும், சோமவாரத்திலும் மரத்தில் நூல் சுற்றுவோர் சந்ததி பெறுவர். புருஷசூக்தம் ஓதி வழிபடுவோர் நால்வகை புருஷார்த்தங்களையும் அடைவர். பொதுவாக அசுவத்த பூஜை முற்பகலில் மட்டுமே செய்தல் வேண்டும். ஸ்ரீமுஷ்ணத்தில் உள்ள அசுவத்த விருக்ஷத்திற்கு விதிவிலக்கு. இங்கு

எப்பொழுதும் எந்நாளும் வழிபாடு செய்யலாம். ஏனெனில் ஹரி இங்கே நித்யம் எழுந்தருளியிருக்கிறார். நித்ய புஷ்கரணிக்கரையில் இம்மரத்தினடியில் காயத்ரி ஜபிப்போர் பிரம்மஹத்தி தோஷத்தினின்றும் விடுபடுவர்.

**உற்சவங்கள்**

'உற்சவம்' என்ற சொல்லுக்கு மகிழ்ச்சி உண்டாக்குதல் என்று பொருள். உற்சவ காலங்களில் கோயில் மூர்த்திகளுக்கு விசேஷ அபிஷேகம், திருவாபரணம் பூட்டுதல், கலையழகு மிளிர அலங்காரம் செய்தல், வீதி புறப்பாடு, பல்வேறு வாகனங்களில் எழுந்தருளல், வேத திவ்யப் பிரபந்தங்கள் ஓதுதல், மேளதாளங்கள் ஒலித்தல், கதாகாலக்ஷேபங்கள் ஏற்படுத்துதல் முதலானவை புற உலக வாழ்க்கையில் உழன்று கொண்டிருக்கும் மக்களின் பொறி புலன்களை இறைவனோடு சம்மந்தப்படுத்த நற்கதியில் செலுத்துவதற்கு முன்னோரால் ஏற்படுத்தப்பட்டவை.

ஸ்ரீபூவராஹசுவாமி எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ முஷ்ண க்ஷேத்திரத்தில் ஆண்டுதோறும் இரண்டு உற்சவங்கள் சிறப்பாக நடைபெறுகின்றன. ஒன்று மாசி மாதம் பரணியில் தொடங்கி பூசம் வரையில் ஏழு நாட்கள் ஸ்ரீமுஷ்ணத்தில் நடந்து எட்டாம் நாள் பெருமாத்தூர் கிராமத்தில் பெருமாள் எழுந்தருளி ஒன்பதாம் நாள் மகத்தன்று வங்கக் கடலில் கிள்ளையில் தீர்த்தம் தந்து மறுநாள் முதல் வாழ்க்கை, லால்புரம், சிதம்பரம், மேலமூங்கிலடி, புவனகிரி, ஆலம்பாடி, தேத்தாம்பட்டு, ராமாபுரம், கவரப்பாளையம் ஆகிய கிராமங்களில் பதினைந்து நாட்கள் உற்சவங்கள் நிகழ்த்தப்பெற்று, பிறகு பெருமாள் ஸ்ரீ முஷ்ணம் எழுந்தருளியவுடன் உற்சவம் முடிகிறது. இது மாசி மக பிரம்மோற்சவம் எனப்படுகிறது. இந்த உற்சவத்தில்

சமுத்திரத்திற்கு எழுந்தருளும் முன் தைக்கால கிராமத்தில் ஒரு நவாப் அடக்கம் செய்யப்பட்ட மசூதி வழியாக எழுந்தருளுவதும், மசூதி மேட்டில் மேளதாளங்களுடன் பூசையை ஏற்றுக் கொள்வதும் நவாப்பின் அரண்மனை வரையில் எழுந்தருளுவதும் ஒரு சிறப்பு.

இரண்டாவது பிரம்மோற்சவம் சித்திரை மாதத்தில் ஸ்ரீமுஷ்ணத்திலேயே நடைபெறுவது. ஒன்பது நாட்கள் பகல் இரவு பெருமாள் வீதிக்கு எழுந்தருளுகிறார். ஒன்பதாவது நாள் மட்டையடி உற்சவம் விசேஷமானது. சித்ரா பௌர்ணமி அன்று நண்பகலுக்கு மேல் நித்ய புஷ்கரணியில் தீர்த்தவாரி.

ஒவ்வொருமாதத்திலும் 2 ஏகாதசிகள், பௌர்ணமி,அமாவாசை, மாதப்பிறப்பு இந்த நாட்களில் போக நாராயணசுவாமி பிராகாரத்தில் எழுந்தருளுகிறார்.
வெள்ளிக்கிழமை தோறும் ஸ்ரீ அம்புஜவல்லித்தாயார் டோலோற்சவம்.

| | |
|---|---|
| சித்திரை | - அவதார தினமாகிற ரேவதியில் பூவராஹன் எழுந்தருளுகிறார். |
| வைகாசி | - விசாகம் உற்சவர் கருடவாகனம் |
| ஆடி | - ஆண்டாள் உற்சவம் பத்துநாள் |
| ஆவணி | - ஸ்ரீஜெயந்தி உறியடி |
| புரட்டாசி | - பெருமாள் தாயார் நவராத்திரி கொலு |
| ஐப்பசி | - தீபாவளி உற்சவம் |

கார்த்திகை - திருக்கார்த்திகை சொக்கப்பனை
மார்கழி - பகல் பத்து அத்யாயன உற்சவம்
இராப்பத்துஆண்டாள் நீராட்டு, வைகுண்ட ஏகாதசி

தை - தை சங்கராந்தி யக்ஞவராகன் வீதி உற்சவம்
கருடசேவை,யக்ஞவராகனுக்கும்
ஆண்டாளுக்கும் திருக்கல்யாணம்.
மாட்டுப் பொங்கல் பார்வேட்டை, தைப்பூசம்
குணமங்கலத்தில் வெள்ளாற்றில் தீர்த்தம்

பங்குனி - பங்குனி உத்திரம் பெருமாள் தாயார்
திருக்கல்யாணம்,மறுநாள் பூண்டியில்
வெள்ளாற்றில் தீர்த்தம்,திரு ஊரல்
உற்சவம்,அக்ஷய திருதியை கருடசேவை.

## ஸ்ரீ வராஹ கவசம்

புவியில் ஸ்ரீமன் நாராயணன் எழுந்தருளிய
எட்டு முக்கிய தலங்கள் முதல் அர்ச்சை ஆகுமே
திருவரங்கம் ஸ்ரீமுஷ்ணம் திருவேங்கடம் சாளக்ராமம்
நைமிசாரண்யம் வானமாமலை புஷ்கரம் ஸ்ரீபத்ரிகாசிரமம்
ஆகுமே

ஸ்ரீருத்ரனன் மார்ரென வாக்கு வழியாக
முராரியின் கல்யாணம் குணம் கேட்குமே
பார்வதிதேவி மனம் மகிழ்ந்தாளே...

ஸ்ரீமுஷ்ண தலவரலாறுடன் ஸ்ரீ வராஹனின் குணமே
கேட்கும்

மனம் திருப்தி ஏற்படவில்லையெனவும்
மீண்டும் கேட்டிட உள்ளம் துடிப்பதாக
பார்வதியும் வேண்டினாளே...
மலைமகளே கேட்டிடுவாய், ஸ்ரீமுஷ்ண பெருமை கூறுவேன்
இதனைக் கேட்டதுமே சகல பாவங்களும் நீங்கிடுமே
எனவும் பரமேச்வரன் மொழிந்தாரே.
ஸ்ரீமுஷ்ணத்தில் உள்ள தீர்த்தம் நித்யபுஷ்கரணி
அரக்கர்களை அழித்து உடல் சிரமம் தீர்த்திட்ட
வராஹனின் திருமேனியில் துளிர்த்த வியர்வை
புண்ணியமானதே.
பெருமானின் விரல் தொடர்பால் கங்கை புனிதமானது
திருமாலின் சகல அங்கங்களையும் கொண்டதே
நித்யபுஷ்கரணி
ஆயிரமாய் புனித தீர்த்தங்கள் இதில் சேருகின்றன
நீராடியவர் விஷ்ணுவின் சாம்ராஜ்யம் அடைவரே.
புஷ்கரணியின் அக்னிமூலையில் உள்ளதே அச்வத்தமரம்
நீராடி ஆசமனம் செய்து மரத்தினை வலம் வரவேண்டும்
அம்புஜவல்லி அன்னையுடன் வராஹப் பெருமானை
ஒரு மாதம் தரிசிப்பவனே யமனையும் வென்றிடுவான்.
ஆதிவியாதி என்ற பிணிகளும் விலகிடுமே
கிரஹ தோஷங்கள் நீங்கி அமைதி காண்பரே
சகல யோகங்கள் ஐச்வர்யங்கள் அடைந்து
பெரும் பதவியாம் முக்தி காண்பாரே.

நித்ய புஷ்கரணி கரைதனில் அரசமர நிழலில்
வராஹ கவசம்தனை நூறுதடவைகள் கூறுபவரே
இந்திரியங்களை வென்றிடுவாரே.

காசம், இரத்த அழுத்தம், குஷ்டம் போன்ற
தீராத வியாதிகளும் அவரை அண்டாதே

உயர்வான அந்த கவசம்தனை எந்நாளும் கற்பவரை
எந்த வியாதியும் நெருங்குவது கிடையாதே.
கவசம்தனை ரட்சையாக கரத்தின் மேற்புறமோ
கழுத்திலோ அணிந்திட விரோதிகள் அழிவரே
பெரும் மன்னர்களாகி போகங்களுடன் வாழ்வரே.

பூத பிரேத பைசாச யக்ஷ கந்தர்வ
அரக்கரால் உண்டாகும் பீதி விலகிடுமே
விஷஜந்துகளால் தீமைகள் ஏற்படாதே.

மூவுலங்களுக்கும் புனிதமானதும்
வானவ மானிடருக்கு இணையானதும்
எதிரிகளை அழித்து சாம்ராஜ்ய பதவிதரும்
இந்த கவசமே கூறிட பார்வதி வேண்டினாளே.
மாந்தருக்கு கிடைக்க முடியாத இக்கவசம்
சகல சம்பத்துக்கள் வெற்றியை நல்கிடும் என
சங்கரனும் தேவியிடம் கூறினாரே...இதுவே..
அங்கங்களைக் காத்திடும் கொடுமை நீக்கிடும்

சகல பிணிகள், தோல்வினைகள் அகற்றிடும்
விஷம் ஆபிசாரம் போன்றவைகளைச் சுட்டெரிக்கும்
அதனை மிகவும் பணிவுடன் காத்திட வேண்டுமே.

வராஹன் நிலைத்துள்ள இந்தப் புனிதத் திருஇடமே
வெற்றிகளைக் குவித்தும் எதிரிகள் தொல்லைகளை
தீர்த்திடும் இடமாகுமே.

பன்னக முனிவரால் உருவான வராஹ கவசம்
புண்ணியத்திலும் புண்ணியமானது
அனுஷ்டுப் மந்திரம் கொண்டு ஜபம் செய்துமே

கை, கால்களில் நீரினைத் தெளித்துக் கொண்டு
ஆசமனம் செய்திடல் வேண்டுமே.
ஓம் பூர்புவஸ்ஸுவ என்ற மந்திரமே கூறி
அங்கந்யாஸ கரந்யாஸங்களைச் செய்திடல் வேண்டுமே.

புவிதனைச் சுமந்து காத்திட வராஹப் பெருமான்
சங்கு சக்ரதாரியாய் அபயமுத்திரை காட்டியுமே
எண்ணிடும் எண்ணங்களை ஈடேற்றித் தருவாரே...
கீழ்த்திசையில் வராஹப் பெருமான் காக்கட்டும்
தெற்கில் தண்டகாந்தகன் காக்கட்டும்
மேற்கில் ஹிரண்யாக்ஷஹரன் காக்கட்டும்
வடதிசையில் வசுந்தரையை அரக்கரிடமிருந்து மீட்டவன்
காக்கட்டும்.
பாதாளத்தில் வாயுவாகனன் காக்கட்டும்
வானில் ஹ்ருஷீகேசன் காக்கட்டும்

அதிகாலையில் உயிரினங்களை ரட்சிப்பவன் காக்கட்டும்
நண்பகலில் வஜ்ரகேசன் காக்கட்டும்
அந்திவேளையில் யாவராலும் வணங்கப்படுபவன் காக்கட்டும்

பிரதோஷ சமயம் பத்மாக்ஷன் காக்கட்டும்
இரவில் ராஜீவலோசனன் காக்கட்டும்
நடுநிசியில் பரமேச்வரன் காக்கட்டும்

என்முன்னே கருடவாகனன் காக்கட்டும்
புவியில் மகாதேவன் காக்கட்டும்
நீரில் பாத்வநீபதி காக்கட்டும்

இல்லம்தனில் க்ருஹாத்யக்ஷன் காக்கட்டும்
ஊருக்குள் பத்மநாபன் காக்கட்டும்

கிராமம்தனில் கருணாகரன் காக்கட்டும்

யுத்த பூமியில் தைத்யர்களை வென்றவன் காக்கட்டும்
விஷத்திலிருந்து சக்ரதாரி காக்கட்டும்
பிணியிலிருந்து வைத்திய மாமன்னரும்
மஹாலோகமூர்த்தி காக்கட்டும்.

தபோவடிவான பெருமான்
கர்மவினைகளுக்கு உட்பட்ட புவிதனைப் படைக்கிறான்.
பத்மாவதி துணைவனே
மனத்துயரங்களிலிருந்து ஜீவனைமீட்டு
முக்தி தருகின்றானே.
தானேதானாக உண்டானவன் பாதங்களைக் காக்கட்டும்
குணக்கடலானவன் மர்மபாகத்தைக் காக்கட்டும்
ஜனார்த்தனன் துடைகளைக் காக்கட்டும்

வெற்றியை அளிப்பவன் ஜானுவைக் காக்கட்டும்
புருஷோத்தமன் வயிற்றினைக் காக்கட்டும்
இடுப்புப்பகுதியை விச்வம்பரன் காக்கட்டும்
பக்கங்களைச் சுராத்யக்ஷன் காக்கட்டும்.

வயிற்றைப் பராத்பரன் காக்கட்டும்
நாபியைப் பிரஹ்மபிதா காக்கட்டும்
இதயம்தனை ஹிருதயேச்வரன் காக்கட்டும்

நகங்களை மஹாசம்ஷ்ட்ரன் காக்கட்டும்
கண்டத்தை விமுக்திதன் காக்கட்டும்
கரங்களை ப்ரபஞ்ஜனபதி காக்கட்டும்

உள்ளங்கையை ஹம்ஸபதி காக்கட்டும்
விரல்களை ஸ்ரீஹரி காக்கட்டும்
முகவாய் உதடுகளை ஜெகத்காரணன் காக்கட்டும்.
முகத்தினை மதுவை வதம் செய்தவன் காக்கட்டும்
பற்களை தாமோதரன் காக்கட்டும்
நாசியைப் பரம்பொருள் காக்கட்டும்
நயனங்களை ஸுர்யேந்துலோசனன் காக்கட்டும்
நெற்றியை கர்மபலாத்யக்ஷன் காக்கட்டும்
செவிகளை மஹாரதன் காக்கட்டும்
சிரசினை சேஷசாயி காக்கட்டும்
கேசப்பகுதியை நிராமயன் காக்கட்டும்
சர்வ அங்கங்களையும் ஸர்வேச்வரன்
எக்காலமும் எந்நாழிகையும் காக்கட்டும்
இவ்விதமாக வராஹ கவசம் இயற்றப்பட்டதே.

இதனை படிப்பவரும் கேட்பவரும்
மரணநீதியை வெற்றி காண்பதுடன்
அவரை பூதகணங்களும் வணங்குகின்றனவே.

பூத, வேதாள அரக்க கணங்களால் உண்டாகும்
பீதியுடன் அரச கோபமும் நாசம் அடைகின்றனவே

தீராத பிணிகளும் விலகிடும் என்பது சத்தியமே
இந்தக் கவசம் கழுத்தில் எந்த பெண் தரிப்பாளோ
அவள் மலடியானாலும் மழலைதனை அடைவாளே.

எதிரிக் கூட்டங்கள் அழிந்தொழியும்
துக்கங்கள் விலகிடுமே
கெட்ட கனவுகளும் கேடுகளும் தோன்றாதே.
இந்த கவசத்தை படித்து அறிந்தவர்

பிரம்ம வித்தையை உணர்ந்தவர் ஆவாரே
சகல மாயைகளிலிருந்து விடுபடுவரே
இந்திரனுக்கு நிகரான ஐச்வர்யம் அடைவரே
பூமிதேவி துணைவரும் வராஹப் பெருமானின்
கவசமே அணிவர்
சகல பகையும் வெற்றிகண்டு
உலகில் பெரும்புகழ் அடைவரே.
ஞாயிற்றுக்கிழமைதனில் நித்யபுஷ்கரணி கரைதனில்
நூறுமுறைகள் வராஹ கவசம்தனை ஜபிப்பவர்க்கு
அதிசய முறையில் ராஜ்யசம்பத்து உண்டாகுமே
இதில் ஐயப்பாடு கிடையாதே.
வராஹ மந்திரம்தனை ஒருலட்சம் கூறினாலோ
பத்தாயிரம் முறை பாயாசம் அன்றி நெய்யால் ஹோமம்
செய்தாலோ
இந்தக் கவசம்தனை மூன்று வேளைகளிலும் கூறினாலோ
புவிக்கே மன்னர் ஆவது சத்தியமே.
தடைகள் யாவையும் அகற்றிடுமே.
உலகின் சகல மகிழ்வினையும் நல்கிடுமே
என் அன்புக்கு இனியவளே தேவியே
இந்தக் கவசம்தனை கொடுமையானவரிடமிருந்து
நீயே காத்திடுவாய் என ஈசன் கூறினாரே
பார்வதி தேவியும் ஈசன் வழியாகவே
இந்த வராஹ கவசமே கேட்டு மகிழ்ந்தனளே
விநாயகன் குமரன் என்ற இரு மகன்களைப் பெற்றனளே.
இதனை படிப்பவரும் கேட்பவரும்
சகல பாவங்களுமே நீங்கி
விஷ்ணு உலகமான மோட்ச சாம்ராஜ்யம்
அடைவரே. இது உறுதியே சத்தியவாக்கு.

"ஸ்ரீ வராஹ கவசம் முற்றிற்று"

ஸ்ரீவராஹ அவதாரத்தில் தொன்மை

1. நித்ய கர்மானுஷ்டானம் : ஒரு நற்செயலை ஆரம்பிக்க நாம் சங்கல்பம் செய்யும் போது "த்விதீய பரார்த்தே ஸ்ரீ சுவேதவராக கல்பே வைவஸ்வத மன்வந்தரே கலியுகே பிரதமேபாதே என்று சொல்கிறோம். தற்பொழுது நாம் வாழும் கல்பம் ஸ்ரீ சுவேதவராஹ கல்பம் எனப்படுகிறது.
2. ரிக் வேதம், ஸ்ரீ விஷ்ணுபுராணம், சங்க இலக்கியங்களில் பரிபாடல், ஆழ்வார்கள் அருளிய பிரபந்தம் இவற்றில் ஸ்ரீவராஹரைப் பற்றிய மேன்மையான செய்திகள் வழங்கப்பட்டுள்ளது.
3. பத்தாம் நூற்றாண்டில் வாழ்ந்து புகழ் பெற்ற அரசர்களுக்கு ஸ்ரீவராஹப் பெருமாளே குலதெய்வமாக விளங்கினார்.
4. திருமலையில் சுவாமி புஷ்கரிணி குளத்தின் கரையின்மேல் ஆதிவராக சுவாமியின் கோயில் உள்ளது. திருமலை திருப்பதி கல்வெட்டுகளில் வராஹசுவாமி "ஞானப்பிரான்" என்று அழைக்கப்பட்டதாகக் குறிப்பு உள்ளது. இன்றும் கோயில் பூஜையில் முதல் மரியாதை ஆதிவராஹசுவாமிக்குத்தான்.
5. காஞ்சிவரதர் சன்னிதியிலும், மேல்கோட்டை என்னும் திருநாராயணபுரம் கோயிலிலும் ஸ்ரீவராஹப்பெருமானுக்கு முதன்மையான வழிபாட்டுமுறை நெடுங்காலமாகவே உள்ளது.
6. ஸ்ரீவைகானச பகவத்சாஸ்திரத்திலும் ஸ்ரீ பாஞ்சராத்ராகம சாஸ்திரத்திலும் ஸ்ரீவராஹப் பெருமாளின் மகத்துவங்கள் விளக்கப்பட்டுள்ளன.

7. ஸ்காந்த புராணத்தில் ஸ்ரீவராஹசுவாமியின் மகாத்மியம் விரிவாக சொல்லப்பட்டுள்ளது.

8. பிரம்மாண்ட புராணத்தில் ஸ்ரீவராஹருடைய பெயர் சொல்லி ஸ்தோத்திரம் செய்தால் பல ஜென்மங்களில் செய்த பாவம் விலகும் என்று எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

9. ஸ்ரீமுஷ்ண க்ஷேத்திரம் கொடிய பாபங்களைப் போக்க வல்லது. கயா, பிராயாகை, காசி இவைகளைக்காட்டிலும் 100 மடங்கு ஏற்றம் கொண்டது. எனவே ஸ்ரீ வராஹப் பெருமாளை சேவிப்பீர் என்று நாரதரைப் பார்த்து சங்கரர் கட்டளை இடுவதாகப் புராணம் செய்தி விளம்புகின்றது.

முஸ்தா என்ற சொல்லுக்கு ஒன்று சேர்ந்திருத்தல் என்ற பொருள் கூறுவர். ஒரு கொத்தில் பல கிழங்குகள் ஒன்று சேர்ந்துள்ளதால் கோரைக்கிழங்கு முஸ்தா என்ற பெயர் வந்தது. தண்ணீர் நிறைந்துள்ள கசுப்பு நிலங்களில் உண்டாகும் கிழங்கு சிறந்தது. அதனிலும் சிறந்தது நாகர முஸ்தகம் என்னும் வகை. கோரைக்கிழங்கின் சூர்ணம் பலவிதமான சரீர வியாதிகளைப் போக்க வல்லது. முஸ்தா சூர்ணம் கசப்பும் காரமும் உடையதால் வஸ்த்ர காயம் செய்து, சலித்து, சர்க்கரையுடன் கலந்து ஸ்ரீவராஹப் பெருமாளுக்கு கண்டருளச் செய்து, சாப்பிட வியாதிகள் போய், வலிமை உண்டாகும். முஸ்தா சூரணம் வாயுவை தணிக்க வல்லது; ஜீர்ண சக்தியை பெருக்க வல்லது என்று ராஜவல்லபம் என்ற நூல் கூறுகின்றது. கபம், பித்தம், ஜ்வரம் ஆகாரத்தில் வெறுப்பு, வயிற்றில்

நாக்குப் பூச்சி ஆகியவைகளை போக்க வல்லது என பாவப்ரகாசம் என்ற நூல் தெரிவிக்கின்றது.

10. சாஸ்வத சம்ஹிதை, ஹயகிர்ஷ சம்ஹிதை, பராசர சம்ஹிதை, விஷ்வக்சேன சம்ஹிதை, காடக சம்ஹிதை, பாத்ம சம்ஹிதை ஆகியவற்றில் ஸ்ரீவராஹப் பெருமாளின் வைபவம் விவரிக்கப்பட்டுள்ளது.

## வளையமாதேவி

இவ்வராஹப் பெருமானின் திருக்கல்யாண மண்டபமாயும், புக்ககமாயும் அமைந்தது வளையமாதேவி.

வளவன் மாதேவி என்ற சோழ குலத்தரசியின் பெயரால் அமைந்த வரவாற்றுப் பெருமை படைத்த ஊர் என்றும் கூறுவர். வளவன் மாதேவி என்பவள் 9-ம் நூற்றாண்டில் வாழ்ந்த பராந்தக சோழனுடைய தேவி. அவளுடைய பெயரால் நிலைபெற்ற சதுர்வேதி மங்கலம் வளவன் மாதேவி என வழங்குவதாயிற்று.

வளையமாதேவி என்னும் இத்தலம் கீழ் வளையமாதேவி, மேல் வளையமாதேவி என இரண்டு பாகமாகத் திகழ்கின்றது. மேல் வளையமாதேவியில் அமைந்துள்ள இத்திருக்கோயில் ஊருக்கு நடு நாயகமாக விளங்குகின்றது.

ஸ்ரீவேதநாராயணப் பெருமாள் (மூலவர்)



கோயிலுக்கு எதிரில் பெரிய (கருட) ஜய ஸ்தம்பமும், அகண்ட சன்னிதித் தெருவும், அழகான தேரும், தேரடியும், கோயிலைச் சுற்றி நான்கு தேரோடும் வீதிகளும், மட வளாகமும் நன்கு அமைந்துள்ளன. பெரும்பாலான கோயில்களைப் போலவே இக் கோயிலும் கிழக்கு நோக்கி இருக்கிறது. கோயில் கிழக்கு மேற்கில் 200 அடி நீளமும், தெற்கு வடக்கில் 100 அடி அகலமும் கொண்டுள்ளது. கோயிலுக்குத் தெற்கில் "பாவன தீர்த்தம்" என்கிற சரித்திரப் பிரசித்திப் பெற்ற காத்யாயன புஷ்கரிணியும் உண்டு. சன்னிதியின் முன்புறம் பெரிய



ஸ்ரீ பூவராஹ பெருமாள்

ராஜகோபுரமும், சுற்றுத் திருமதில்களும், மதில்களைச்சுற்றி அடர்ந்த நந்தவனமும் அமைந்து கோயிலை அழகுறச் செய்கிறது.



ஸ்ரீ காத்யாயனரிஷி

ராஜகோபுர வாயில் வழியே உள்ளே நுழைந்ததும் பலிபீடம், கொடி மரம், கருடாழ்வார் சன்னிதி இவைகளைக் காணலாம். இவற்றிற்குத் தெற்கே திருமடைப்பள்ளி உள்ளது. இதன் மேல்புறம் தெற்குப் பிராகாரத்தில் பெரிய முன் மண்டபத்தோடு கூடிய ஸ்ரீகமலவல்லித்தாயார் சன்னிதி கிழக்கு நோக்கி இருக்கிறது. வடக்குப் பிராகாரத்தில் காத்யாயன ரிஷியின் கோயிலும், அதன் முன்புறம் தல விருக்ஷமான புன்னை மரமும் காணப்படும். வடகிழக்கு மூலையில் வாகன மண்டபமும், அதனுள் யாகசாலையும் இருக்கின்றன. இம்மண்டபத்தில் சமயச் சொற்பொழிவும், இன்னிசை, வேத பாராயணங்கள் முதலியவை நடைபெறும்.



ஸ்ரீ ஆதிநாராயணப் பெருமாள்

சன்னிதியினுள், பெரிய மஹாமண்டபம், அர்த்த மண்டபம், கர்ப்ப கிருஹம், உள்சுற்று, பிராகாரம் முதலானவை ஆகம முறைப்படி அமைந்துள்ளன. மஹா மண்டபத்தில் ஆதிநாராயணப் பெருமாள் சன்னிதி, அனுமார் சன்னிதிகளும், அர்த்த மண்டபத்தில் ஆழ்வார் சன்னிதி, ஆசார்யர்கள் சன்னிதிகள், ஸ்ரீ பூவராஹப் பெருமாள் சன்னிதி, ஸ்ரீசக்ரவர்த்தித் திருமகன்

சன்னிதிகளும், கர்ப்பகிருஹத்தில் ஸ்ரீவேதநாராயணப் பெருமாள் சன்னிதியும் தனித்தனியே அமைந்திருக்கின்றன. காத்யாயன முனிவன் தன் மகளான பெரிய பிராட்டிக்குச் சீதனமாக முன்பு சூர்யனால் தனக்கு அளிக்கப்பட்டதும், மிக்க ஒளியோடு கூடியதும், மூப்பு,பிணி,மரணம் முதலியவற்றைப் போக்குவதுமான பெருமை வாய்ந்த செம்பொன் அணியை அளித்தான். "வளையம்" என்னும் அப்பூணைப்பெற்று உவப்புடன் அணிந்து கொண்ட அத்தாயார் "வளையமாதேவி" என வழங்கப்படலானாள். அத்தேவியின் உறைவிடமாதலின் அவ்வூர் வளையமாதேவி என வழங்கப்படுகிறது.

## கைசிக மஹாத்மியம் திருக்குறுங்குடி வராஹ க்ஷேத்திரம்

மஹாவிஷ்ணுவின் அவதாரமான வராஹமூர்த்தி இந்த மஹாத்மியத்தை பற்றி பூமிதேவிக்குக் கூறினார். இந்தக் கதை திருக்குறுங்குடி என்ற 108 திவ்ய தேசத்தில் நிகழ்ந்தது. நம்பாடுவான் என்ற பக்தன் சண்டாள குலத்தில் பிறந்தவன். திருக்குறுங்குடி நம்பி பெருமானை எப்பொழுதும் வழிபடுவான். கோயிலுக்குள் செல்ல முடியாததால் ஒவ்வொரு ஏகாதசி அன்றும் கோயில் வாயிலில் நின்று பாடல்கள் பாடுவான். விரதம் இருந்து, அன்றும் இரவு இறைவனை தரிசிக்க புறப்பட்டான். ஒரு பிரம்மராக்ஷசன் நம்பாடுவானை உண்ண திட்டமிட்டான். அப்பொழுது நம்பாடுவான் தான் இறைவனை தரிசித்த பிறகு தன்னை உண்ணும்படி அந்த ராக்ஷசனை வேண்டினான். அவன் ஒப்புக் கொள்ளவில்லை. பிறகு நம்பாடுவான் 18 வாக்குகள்

கொடுத்தான். இந்த வாக்குகள் ஒருவன் எப்படி வாழவேண்டும் என்பதை சொல்லுபவை.

இறைவனை தரிசித்து வந்ததும் அந்த பிரம்மராக்ஷசனிடம் சென்றான். வழியில் மாறுவேடத்தில் வந்த இறைவன் எப்படியாவது நம்பாடுவானை காப்பாற்ற முற்பட்டார். ஆனால் நம்பாடுவான் கொடுத்த வாக்கை காப்பாற்றாமல் இருப்பது தவறு என்று கூறி அந்த ராட்க்ஷசனை தேடிச் சென்றான். இதைக் கண்ட அந்த பிரம்மராக்ஷசன் நம்பாடுவானின் நல்ல குணத்தைக் கண்டு அவன் அர்ப்பணித்த அந்த இறைவன் பாடலில் உள்ள புண்ணியத்தைக் கேட்டான். பிறகு அந்த ராட்க்ஷசன் நம்பாடுவானிடம் சரணம் புகுந்தான். அவன் அந்த இரவு பாடிய பண் 'கைசிகம்' என்றது. அந்த பலத்தினால் அந்த ராட்க்ஷசன் மோக்ஷம் பெற்றான். நம்பாடுவானும் மோக்ஷம் பெற்றான். அன்றில் இருந்து கைசிக ஏகாதசி மிகப் பிரசித்தி பெற்றது.

திருக்குறுங்குடி கோயிலில் இன்றும் கைசிக ஏகாதசி சிறப்பாக நடைபெறும்.

## நித்ய கல்யாண பெருமாள் திருக்கோயில், திருவிடந்தை (பெருமாளுக்கு தினமும் திருக்கல்யாணம்)

பெருமாளின் 108 திருப்பதிகளுள் ஒன்றான காஞ்சிபுரம் மாவட்டத்தில் உள்ள திருவிடந்தையில் நித்ய கல்யாண பெருமாள் எழுந்தருளி பக்தர்களுக்கு அருள்பாலிக்கிறார். இவருக்கு ஆண்டில் 360 நாட்கள் திருக்கல்யாண உற்சவம் நடத்தப்படுகிறது.

ஒருமுறை குனி என்ற முனிவரும், அவரது மகளும் சொர்க்கம் செல்ல தவம் இருந்தனர். குனி முனிவர் மட்டும் சொர்க்கம் சென்றார். அவருடைய மகள் சொர்க்கம் செல்லவில்லை. பிறகு அவ்விடம் வந்த நாரதர் அந்தப் பெண்ணிடம் "நீ திருமணமாகாதவள். எனவே உன்னால் சொர்க்கம் செல்ல முடியாது" என்று சொல்லி அங்கிருந்த பிற முனிவர்களிடம் அப்பெண்ணைத் திருமணம் செய்து கொள்ளும்படி வேண்டினார். பிறகு காலவரிஷி என்பவர் அவளை திருமணம் செய்து கொண்டு 360 பெண் குழந்தைகளைப் பெற்றார். சிறிது காலம் கழித்து தன் பெண்களை ஏற்றுக்கொள்ள வேண்டுமென திருநாராயணனை வேண்டி கடும் தவம் புரிந்தார். பிறகு திருநாராயணன் வரவில்லை. ஒருநாள் ஒரு பிரம்மச்சாரி அவ்விடம் வந்தான். அவன் திவ்ய தேச யாத்திரைக்காக வந்ததாக கூறினான்.

அவனது தெய்வீக அழகு பெருமாளைப் போல் இருக்கவே தனது பெண்களை திருமணம் செய்து கொள்ள காலவரிஷி அந்த இளைஞனை வேண்டினார். அவனும் ஒப்புக்கொண்டு தினம் ஒரு பெண் வீதம் 360 நாளும் திருமணம் செய்து கொண்டான். பிறகு ஒருநாள் கடைசி நாளில் அந்த இளைஞன் தன் சுயரூபம் காட்டினான்.

அது வேறு யாரும் அல்ல வராஹமூர்த்தி வடிவில் வந்த ஸ்ரீமத் நாராயணன் தான். அவர் 360 கன்னியர்களையும் ஒன்றாகவேச் சேர்த்து ஒரே பெண்ணாக்கி தனது இடப்பக்கத்தில் வைத்து கொண்டு சேவை சாதிக்கிறார்.

திருவாகிய லக்ஷ்மியை இடப்புறம் ஏற்றுக் கொண்டவர் எம்பெருமான் ஆனபடியால் இத்தலம் திருவிடவெந்தை எனப்பட்டது. இதுகாலப் போக்கில் மருவி 'திருவிடந்தை' என ஆனது.

திரேதாயுகத்தில் மேகநாதன் என்ற அரசனின் புதல்வன் 'பலி' என்ற அரசன் நல்லாட்சி புரிந்து வந்தான். அக்காலத்தில் மாலி, மால்யவான், ஸீமாலி ஆகிய அரக்கர்கள் தேவர்களுடன் போர் புரிய பலி அரசனின் உதவியை நாடினார்கள். பலி அரசன் போர் புரிய மறுத்துவிட்டான். இதனால் அரக்கர்கள் தேவர்களுடன் சண்டையிட்டு தோற்று பின் பலி அரசனிடம் மீண்டும் உதவி கேட்டனர். ஆகையால் அரக்கர்களுக்காக தேவர்களுடன் பலி அரசன் சண்டையிட்டு போரில் வென்றான். இதன் விளைவாக பலி அரசனுக்கு பிரம்மஹத்தி தோஷம் ஏற்பட்டது. இந்த தோஷம் போக்க எம்பெருமானை குறித்து இத்தலத்தில் கடும் தவமிருந்தான். இதன் பயனாக தவத்தை மெச்சிய எம்பெருமான் வராஹரூபத்தில் அவனுக்குக் காட்சி கொடுத்து அவன் தோஷம் போக்கினார் என்பது வரலாறு. இத்தலத்தைக் குறித்து திருமங்கையாழ்வாரும் மங்களாசாசனம் செய்துள்ளார் என்பது விசேஷமாகும்.

நித்ய கல்யாண பெருமாளாக அருள் பாலிக்கும் பெருமாளின் தாடையில் ஒரு பொட்டு இருக்கிறது. திருஷ்டிப் பொட்டுபோல் இயற்கையாக அமைந்துள்ளது விசேஷமாகும். 360 கன்னியரை ஒரே பெண்ணாகச் செய்தமையால் இங்குள்ள தாயாருக்கு அகிலவல்லி தாயார் என்ற பெயர் சூட்டப்பட்டது. 360 கன்னியரில் முதல் கன்னிக்கு கோமளவல்லி நாச்சியார் என்ற பெயர் உள்ளது. இவ்விடம்

உள்ள தனி சன்னதியில் தாயாருக்கு கோமளவல்லி தாயார் என்ற பெயர் உள்ளது காணலாம்.

இவ்விடம் பெருமாள் தனது ஒரு திருவடியை பூமியிலும், மற்றொன்றை ஆதிசேஷன் மற்றும் அவரது மனைவியின் தலைமீது வைத்து கொண்டும், அகில வல்லி தாயாரை இடது தொடையில் தாங்கிக்கொண்டும் வராஹ மூர்த்தியாக அருள்பாலிக்கிறார் என்பது குறிப்பிடத்தக்கது.

## அருள்மிகு தேவநாத பெருமாள் திருக்கோயில் திருவஹீந்திரபுரம்

ஸ்ரீமதே தரங்கமுகநந்தின் ஹேமாப்ஜ நாயகி ஸமேத ஸ்ரீதேவநாத ப்ரப்ஹ்மணே நம:

ஸ்ரீயப்பதியான ஸ்ரீமந்நாராயணன் அர்ச்சாரூபியாய் எழுந்தருளி ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்டுள்ள 108 ஸ்ரீ வைஷ்ணவ திருத்தலங்களில், நடுநாட்டுத் திருப்பதிகள் இரண்டனுள் ஒன்றான திருவஹீந்திரபுரம் திவ்யதேசம் தமிழ்நாட்டில் கடலூர் மாவட்டம் பண்ருட்டி அருகே அமைந்துள்ளது.

திருவஹீந்திரபுரம் (திருவயிந்தை) எனப் பெயர் பெற்றது. கருடனால் கொண்டுவரப்பட்ட விரஜாதீர்த்தம் கருடநதி என்ற பெயரில் பக்கத்தில் ஓடுகிறது. ஆதிசேஷன் கொண்டுவந்த பாதாள கங்கை சேஷ தீர்த்தம் என்ற பெயரில் கோயிலுக்குள் பிராகாரத்தில் தாயார் சன்னிதி முன்னர் உள்ளது. திருமஞ்ஜனத்துக்கும், சேஷ தீர்த்தம் நிவேதனத்துக்கும் இன்றும் உபயோகப்படுகின்றன. கோயிலுக்கு முன்னர் கிழக்கில் ஆஞ்ஜநேயரால்

கொண்டுவரப்பட்டு சஞ்சீவி பாவதம் ஒரு பக்கம் சேர்ந்துள்ள ஔஷதகிரி உள்ளது. இது பிரம்மா தவம் செய்த இடம் ஆதலால் பிரம்மாசலம் என்ற பெயருடையது இம்மலை. ஸ்ரீவேதாந்த தேசிகர் அரச மரத்தின் கீழ் தவம் செய்து மந்திரசித்தி பெற்று கருடனையும் ஹயக்ரீவரையும் தரிசித்து வரம் பெற்றார். ஹயக்ரீவனுக்கு ஆதியில் சன்னிதி ஏற்பட்ட இடம். சுவாமி ஸ்ரீதேசிகன் இந்த க்ஷேத்ரத்தில் சுமார் 40 வருட காலம் வாசம் செய்து விசிஷ்டாத்வைத சித்தாந்த நிர்தாரணம் செய்து ஹயக்ரீவ தோத்திரம், கருடபஞ்சாஸத் அச்சுத சதகம் (ப்ராக்ருதம்) ரகுவீரகத்யம், கோபாலவிம்சதி, மும்மணிக்கோவை, நவரத்தினமாலை, பரமபதங்கம் மற்றும் ரஹஸ்ய கிரந்தங்களையும் அருளிச் செய்துள்ளார். அவர் எழுந்தருளியிருந்த இடம் தேசிகன் திருமாளிகை என்ற பெயரில் நன்கு பராமரிக்கப்பட்டு வருகிறது. கோயிலுக்குள் உள்ள ஸ்ரீதேசிகன் திவ்யமங்கமள விக்ரகம் அவர் திருக்கைகளாலே வார்க்கப்பட்டதாகும். ஸ்ரீதேசிகன் திருமாளிகையில் பக்கத்தில் உள்ள நந்தவனத்தில் தேசிகன் தன் திருக்கைகளால் கட்டிய திருக்கிணற்றை இன்றும் காணலாம். கோயிலுக்குள் உள்ள ஆதிசேஷன் கிணற்றில் (சேஷ தீர்த்தத்தில்) உப்பு, வெல்லம், மிளகு,பால் இவற்றை பிராத்தனையாக சேர்ப்பது சர்வரோக நிவாரணம் அளிக்கிறது. ஆடி, தை வெள்ளிக்கிழமைகளில் நாகபூஜை புற்றுக்கு பால் விடுவதற்குப் பதில் இந்த திருக்கிணற்றில் ஆதிசேஷனுக்கு பால் சேர்ப்பது இன்றும் வழக்கமாகப் உள்ளது. ஆதலால் திருவஹீந்திரபுரம் ஓர் ஒப்பற்ற பிராத்தனை ஸ்தலமாக விளங்குகிறது. சித்ராபௌர்ணமி, புரட்டாசி சனிக்கிழமைகளில் ஆயிரக்கணக்கில் முடி காணிக்கை செலுத்தப்படுகிறது.

மூலவர் :

தெய்வநாயகன் - கிழக்கே திருமுகமண்டலம் நின்ற திருக்கோலம் உற்சவர்: அச்யுதன், மூவராகிய மூர்த்தி, அடியவர்க்கு மெய்யன், தேவநாதன், தெய்வநாயகன், வைகுண்டநாதன் என பல திருநாமங்களுடன் விளங்குபவர், வேதாந்த தேசிகரால் நின் வடிவழகு மறவாதார் பிறவாதாரே என்று மங்களாசாசனம் செய்யப்பட்டவர். திருப்பதிக்கு நேர்ந்துகொண்ட பிரார்த்தனைகளை இங்கு செலுத்துவது வழக்கமாக உள்ளது.

தாயார் :

ஸ்ரீ ஹேமாம்புஜவல்லி, வைகுண்டநாயகி, பார்கவி, செங்கமலவல்லி முதலிய திருநாமங்களுடன் அருள்பாலிக்கும் மஹாவரப்ரசாதினி, பிரார்த்தனைக் கல்யாணங்கள் இச்சன்னிதியில் நடைபெறுகின்றன.

பிரத்யட்சம் :

சந்திரன் பூஜை செய்த இடம், கருடன், பிரம்மா, சிவன், இந்திரன் பூமாதேவி, ப்ருகு, மார்க்கண்டேயர், ததீசி முதலிய பலரும் தவம் செய்து பகவானை தரிசித்து வரம் பெற்ற ஸ்தலம். சோழ அரசனுக்கு சிவன், விஷ்ணு, பிரம்மா ஆகிய மும்மூர்த்திகளும் தான் ஒருவனே என்று உணர்த்த மும்மூர்த்திகளின் அங்க அடையாளங்களாக பத்ரம், ஜடை, நெற்றிக்கண், சங்கு, சக்கரம், கதை தரித்த மூவராகிய மூர்த்தி ஸ்ரீதேவநாதன், திருமங்கை ஆழ்வார் மங்களாசாசனம்.

மற்ற சன்னிதி சக்ரவர்த்தி திருமகன் ஸ்ரீராமன் (ரகுவீரகத்யம் மங்களாசாசனம்) ஸ்ரீவேணுகோபாலன் (கோபாலவிம்சதி மங்களாசாசனம்) சக்கரத்தாழ்வார்,

பள்ளிகொண்ட பெருமாள், ஸ்ரீராஜகோபாலன், ஸ்ரீ லஷ்மிநரசிம்மன், அஹிந்திரபுரநாதன், ஆண்டாள்,கருடன் (கருட பஞ்சாசத் மங்களாசாசனம் விஷ்வக்சேனர்) ஆழ்வார் ஆசார்யர்கள் ஸ்ரீ தேசிகன் சன்னிதிகள் உள்ளன. ஸ்ரீ தேசிகன் தன் விபவத்தில் ஆராதித்த ஸ்ரீ யோகஹயக்ரீவர் மூர்த்தி பெருமாள் சன்னிதியில் எழுந்தருளியுள்ளார். மலையடிவாரத்தில் வடக்குமுகமாக சஞ்சீவி ஆஞ்சநேயர் அருள்பாலிக்கிறார். மலைமேல் லஷ்மிஹயக்ரீவர், யோகஹயக்ரீவர், வேணுகோபாலன், கருடன் ஒரே சன்னிதியில் எழுந்தருளியுள்ளனர்.

| | | |
|---|---|---|
| விமானம் | : | சுத்த சத்வ (வைகுண்ட) விமானம் சந்திரவிமானம் |
| தீர்த்தங்கள் | : | கீழே கருட தீர்த்தம், சேஷ தீர்த்தம், மலைமேல் பிரம்ம தீர்த்தம்,பூமி தீர்த்தம், தாயார் திருக்குளம் ஆகியவை. |
| பூஜைமுறை | : | வைகானஸ ஆகம முறைப்படி நித்யம் 6 கால பூஜைகள் விதிமுறைப்படி நடைபெறுகின்றன. வேத பாராயண அத்யாபகமாக (திவ்யப்ரபந்த) கோஷ்டிகள் இங்கே ஒரு கௌரவ கைங்கர்யமாக இன்றும் நடைபெறுகின்றன. |
| உற்சவங்கள் | : | பஞ்சபர்வம் ஏகாதசி, அமாவாசை, பௌர்ணமி,மாதப்பிறப்பு,சனிக்கிழமை தோறும் பெருமாள் புறப்பாடு, வெள்ளி தாயார் உள்புறப்பாடு, பூரம் |

ஸ்ரீ ஆண்டாள் புறப்பாடு, சிரவணம் ஸ்ரீ தேசிகன் திருவீதி புறப்பாடு.

**விசேஷ உற்சவங்கள்**

**சித்திரை மாதம்** : ஸ்ரீ தேவநாதப் பெருமாள் பிரம்மோற்சவம், 5-ம் நாள் இரவு கருடசேவை, 9-ம் நாள் திருத்தேர், தீர்த்தவாரி விடையாற்றி (10 நாள்), திருவாதிரை : உடையாவர் (பாஷ்யகாரர்) சாற்றுமறை (10 நாள்) சித்திரை : மதுரகவிகள் சாற்றுமறை

**வைகாசி மாதம்** : வைகாசி விசாகம் - நம்மாழ்வார் சாற்றுமறை 10 நாள் உற்சவம் பெருமாள் வசந்த உற்சவம் 10 நாள் (பௌர்ணமி சாற்றுமறை) நரசிம்ம ஜெயந்தி

**ஆனி மாதம்** : பௌர்ணமி பெருமாள் ஜேஷ்டாபிஷேகம், கேட்டை - ஹயக்ரீவர் ஜேஷ்டாபிஷேகம், புனர்வசு - ஸ்ரீராமன் ஜேஷ்டாபிஷேகம், ஸ்வாதி - பெரியாழ்வார் சாற்றுமறை (10 நாள்) அனுஷம் - நாதமுனிகள் சாற்றுமறை,கேட்டை முடிய 10 நாள் தேசிகன் வசந்தோற்சவம் - திருமலையில் ஹயக்ரீவர்,தேசிகனுக்கு ஏகாந்த திருமஞ்சனம் சாற்றுமறை பௌர்ணமி - பெருமாள் தோப்பு உற்சவம்.

| | | |
|---|---|---|
| ஆடி மாதம் | : | அமாவாசை - பெருமாள் பூலங்கி, தோமாலை சேவை, திருவாடிப்பூரம் - ஆண்டாள், உற்சவம், (10 நாள்) பெருமாள்,ஆண்டாள், தேசிகன், விசேஷ திருமஞ்சனம், சாற்றுமறை திருவீதி புறப்பாடு வெள்ளி – வரலஷ்மி விரதம் -தாயார் பூலங்கி சேவை உத்திராடம் - ஆளவந்தார் சாற்றுமறை. |
| ஆவணி மாதம் | : | (திருவோணம்) சேர 10 – நாள் மலைமேல் ஹயக்ரீவர் உற்சவம் சாற்றுமறை பௌர்ணமி முடிய10 நாள் பவித்ரோற்சவம்,பூர்ணாஹுதி, கோகுலாஷ்டமி: ஸ்ரீராமகோபாலன் 10 நாள் ஸ்ரீ ஜெயந்தி உற்சவம் திருவீதி புறப்பாடு மறுநாள் உரியடி சேவை. |
| புரட்டாசி மாதம் | : | ஸ்ரீ நிகமாந்த மஹாதேசிகன் பிரம்மோற்சவம் 10 நாள், திருவோணம் - சாற்றுமறை, அங்குரார்ப்பணம் அன்று பெருமாள், தாயார் கண்ணாடி அறை சேவை முதல் நாள் ஹம்ச வாகனமும், 9-ம் நாள் |

| | | |
|---|---|---|
| | | திருத்தேர், 10 நாள்<br>சாற்றுமுறை திருமலை,<br>ஹயக்ரீவர் மங்களாசாசனம்,<br>தேசிகர், ரத்னாங்கிசேவை,<br>சாற்றுமறை, விடையாற்றி<br>சாற்றுமறை, தினம் தேசிகன்,<br>பூலங்கி சேவை, புரட்டாசி<br>ஐப்பசி நவராத்ரி உற்சவம்,<br>மஹாநவமி சேர 9 நாள்<br>பெருமாள் தாயார்<br>சன்னிதியில் சேர்த்தி சேவை,<br>கொலு விஜயதசமி, அம்பு<br>போடுதல், குதிரை வாகனம். |
| ஐப்பசி மாதம் | : | தீபாவளி பண்டிகை -<br>முதலாழ்வார்கள் உற்சவம் 10 நாள்<br>பௌர்ணமி 4 நாள்<br>முறையே பெருமாள்,<br>ஸ்ரீராமர், தாயார்<br>ஸ்ரீதேசிகன் டோலோற்சவம்<br>பூராடம், விஷ்வக்சேனர்<br>(சேனை முதலியார்)<br>சாற்றுமறை. |
| கார்த்திகை மாதம் | : | திருக்கார்த்திகை – தீப உற்சவம்<br>மன்னன் உற்சவம் (10 நாள்)<br>ரோஹிணி – திருப்பாணாழ்வார்<br>சாற்றுமறை. |

| | | |
|---|---|---|
| மார்கழி மாதம் | : | தனுர்மாச பூஜை -அமாவாசை அனுமன் ஜெயந்தி -தசமி - மாலை உற்சவம்,வைகுண்ட ஏகாதசி - திருவத்யாயன உற்சவம் (பகல் பத்து,இராப்பத்து (உபயவேதபாராயண சாற்றுமறை) பகல் பத்து 7-ம் நாள் ஸ்தலதுப்பட்டு உற்சவம், இராப்பத்து 6ம் நாள் பெரிய பெருமாள் சேவை - 7ம் நாள் தைலக்காப்பு உற்சவம் - 8ம் நாள் வேடர்பரி - உற்சவம் இராப்பத்து பிறகுஇயற்பா, தேசிகப்பிரபந்த சாற்றுமறை (2நாள்) கேட்டை - தொண்டரடிப்பொடியாழ்வார் சாற்றுமறை. |
| தை மாதம் | : | 10 நாள் தாயார் உற்சவம் மகர சங்கராந்தி உற்சவம் தாசசத்யர் திருமஞ்சனமும் (வருடம் ஒரு முறை) கனு தீர்த்தவாரி - பரிவேட்டை தை மாதம் 5ம் தேதி: பினாகின் (பெண்ணையாற்று) பெருமாள் தேசிகர் தீர்த்தவாரி உற்சவம், ரதசப்தமி சூர்யபிரபை, பெருமாள் மலை உற்சவம், மகம் திருமழிசைப்பிரான் (10 |

நாள்) உற்சவம் தைப்பூசம் பௌர்ணமி - சேஷவாகனம் சேவை.

| | | |
|---|---|---|
| மாசி மாதம் | : | மிருகசீருஷம் - திருக்கச்சிநம்பிகள் சாற்றுமறை, புனர்வசு குலசேகர ஆழ்வார் சாற்றுமறை, மாசிமகம் பௌர்ணமி மஹோநதி சமுத்ரா தீர்த்த புறப்பாடு. |
| பங்குனி மாதம் | : | ஸ்ரீ ராம நவமி உற்சவம் (9 நாள்) சாற்றுமறை தினம் ஸ்ரீராமன் திருவீதி புறப்பாடு, 7-ம் நாள் பக்த ராமதாஸ் சேவை விசேஷம், பௌர்ணமி - உத்திரம் தாயார், பெருமாள், தேசிகன் பெரிய திருமஞ்சனம், திருப்பாவாடை – சாற்றுமறை. |

## ஸ்ரீ ஹேமாம்புஜவல்லித் தாயார்

வரப் பிரசாதினியான ஸ்ரீ செங்கமலவல்லித் தாயாரை பேசும் தாயார் என்றும் சொல்வர். வெள்ளிக்கிழமை தோறும் தாயார் திருமஞ்சனம் கண்டருளி அருளிச் செயல் கோஷ்டியும், வேதபாராயண கோஷ்டியும், நாதஸ்வரமும் சிறப்பிக்க உள் புறப்பாடு கண்டருள்கிறார். இங்கு சேவிக்கப்படும் திருமடல் அழகு சிறப்புமிக்கது.

ஸ்வாமி தேசிகனுக்கு எல்லா புறப்பாடுகளிலும் தாயாரின் மாலை,ஸ்ரீசடாரி மரியாதை உண்டு என்பது விசேஷம்.

ஆடி அமாவாசையன்று பெருமாள் தாயார் மாலைகள் பெருமாள் ஸ்ரீசடாரியுடன் ஊர்வலம் வந்து ஸ்ரீதேசிகனுக்கு விசேஷ மரியாதை நடப்பது இந்த ஊரில் ஒரு தனி விசேஷம்.

ஆவணி மாதத்தில் ஸ்ரீவரலட்சுமி நோன்பு அன்று மூலவர் தாயாருக்கு பூலங்கி சேவை சிறப்பாக நடைபெறும். உற்சவர் தாயாருக்குப் புறப்பாடாகி அலங்கார பூப்பந்தலில் ஊஞ்சல் சேவையாகும்.

நவராத்திரியில் ஒன்பது நாட்களும் பெருமாளும் தாயாரும் சேர்ந்து கோயிலுக்குள் விசேஷ வாத்யங்களுடன் புறப்பாடு கண்டருளி ஏக விமானத்தில் தாயார் சன்னிதியில் சேவை தருவது மிக ரம்யமான சூழலை ஊரிலுள்ள சேவார்த்திகள் அனைவருக்கும் அனுகிரகிப்பது மிக விசேஷமாகும். நவராத்திரியில் வரும் வெள்ளிக்கிழமையில் சேர்த்தியில் ஆயிரம் தாமரை மலர்களால் சாளக்கிராம அர்ச்சனை பெருமாள் தாயாருக்கு நடக்கும் அன்றைய விசேஷ பிரசாதம் புட்டு.

புரட்டாசியில் ஸ்ரீதேசிகன் பிரம்மோற்சவத்திற்கு முதல் தினம் பெருமாளும் தாயாரும் ஸ்ரீதேசிகன் சன்னிதிக்கு எழுந்தருளி மூவருக்கும் விசேஷ திருமஞ்சனமாகி மாலையில் பெருமாள் தாயார் சேர்ந்து ஸ்ரீ தேசிகன் சன்னிதி கண்ணாடி அறையில் எல்லாக் கோணங்களிலும் திவ்ய தம்பதிகளாக சேவிக்கும் பாக்யம் அருளும் உற்சவ

தினமாகும். ஸ்ரீதேசிகன் பிரம்மோற்சவத்தின் திருவாய்மொழி தொடக்கம் த்வஜாரோஹணத்தன்று தாயார் சன்னிதியில் தான் என்பதும் தனி விசேஷம்.

ஐப்பசியில் கிருஷ்ண த்விதீயை அன்று தாயாருக்கு த்வஜஸ்தம்பத்தின் அருகில் தனி ஊஞ்சல் உற்சவம் சிறப்பாக நடைபெறும்.

மார்கழியில் தனி அத்யாயன உற்சவம் தாயாருக்கென்று அபூர்வமாக நடைபெறும் திவ்ய தேசங்களில் இதுவும் ஒன்று. பகல் பத்து, இராப்பத்து இயற்பா தேசிக பிரபந்த சாற்றுமறை மொத்தம் 22 நாட்கள் சிறப்பாக பெரிய உற்சவமாக நடைபெறும். பின்னர் சிறிய அத்யாயன உற்சவம் என்று திருவாய்மொழி திருநாள் 10 நாட்கள் தாயாருக்கென்று நடைபெறும்.

தை மாதம் கனுப்படித் தினத்தன்று ஆண்டாளும், தாயாரும் சேர்ந்து கோயிலுக்குள் புறப்பாடு சிறப்பாக நடைப்பெறும். தாயாரின் ஸ்ரீசடாரிக்கு கோயில் பின் வாசலில் திருமஞ்சனமாகி ஸ்ரீசடாரியை கெடிலநதிக்கு எழுந்தருளப்பண்ணி தீர்த்தவாரி ஆவது இத்தலத்திற்கே உரித்தான தனி சிறப்புமிக்க உற்சவமாகும்.

பங்குனி மாதம் 4 நாட்கள் வசந்த உற்சவம் நடக்கும். 5ம் நாள் பௌர்ணமி அன்று பங்குனி உத்திர உற்சவம். பெருமாள், தாயார், ஸ்ரீதேசிகன் மூவருக்கும் திருமஞ்சனம்,திருப்பாவாடை மிகப்பெரிய அளவில் தாயார் சன்னிதியில் நடைபெறும். மதியம் ஏதாந்த சேர்த்தி. இரவு பெருமாள்,தாயார் ஊஞ்சல் சேவை நடைபெறும்.

ப்ருகு மகரிஷியின் தவத்திற்கு உகந்து இத்தலத்தில் தாமரை ஒடையில் செந்தாமரையில் அவதரித்ததால் செங்கமலவல்லி, பொற்றாமரை வண்ணத்தாள் (ஹேமாம்புஜவல்லி)

கடல் அலைகளில் உகந்து விளையாடியதால் நீரலைகளின் மத்தியில் தன் முகத் தாமரையை காண்பித்து ஆனந்தமாக விளையாடியதால் தரங்கமுகநந்தினி என போற்றப்படுகின்றாள்.

ஸ்ரீதேசிகன் தாயாரிடம் பிரார்த்திக்கும் போது அம்மா நீதான் என் பிரார்த்தனையை பேரன்போடு கேட்டு அதை பெருமாள் செவிமடுக்கும்படி செய்வாய். நீ சொன்னால்தான் பெருமாள் கேட்பார் என்பதால் உன்னை வேண்டுகின்றேன் என்று பிராத்திக்கின்றார். இப்படிப்பட்ட செங்கமலவல்லித் தாயாரிடம் வேண்டினால் நம் வேண்டுதல்களையெல்லாம் திருச்செவிமடுத்து அவற்றை பெருமாளிடம் சொல்லி இருவருமாக திருவருள் செய்து இருவினை நீக்கி நிறைவேற்றி வைக்காத பிரார்த்தனையே கிடையாது என்கிறார் ஸ்ரீதேசிகன்.

கல்யாணம்,மாங்கல்யபாக்யம்,குழந்தைபாக்கியம்,கல்வி,வேலை வாய்ப்பு,பதவி உயர்வு,இடமாற்றம்,வியாபார முன்னேற்றம் பெறவும்,சத்ரு ஜெயம் பெறவும். தற்காலிக சேவார்த்திகளுக்காக பற்பல வேண்டுதல்களையும் நிறைவேற்ற நம் பிரார்ததனைகளை தேவநாத பெருமாளிடம் சமர்ப்பித்து வாழ்வில் மிகப் பெரிய நன்மைப் பெற்று உய்வோமாக



ஆன்மீக சேவை
விலை ரூ.35/-



ஸ்ரீ ஹேமாம்புஜவல்லிதாயார் - ஸ்ரீ தேவநாதப்பெருமாள்

(உற்சவர்) திருவஹீந்திரபுரம்



ஸ்ரீ ஹேமாம்புஜவல்லிதாயார் (உற்சவர்) திருவஹீந்திரபுரம்



**ஸ்ரீ ஹயக்ரீவர்** (உற்சவர்)
திருவஹீந்திரபுரம்



**ஸ்ரீ லக்ஷ்மி ஹயக்ரீவர்** (மூலவர்)
திருவஹீந்திரபுரம்